# வ. ரா.

அரசியல் சம்பந்தமாகவும், தமிழ் சம்பந்தமாகவும், தொழில் சம்பந்தமாகவும் நான் வேலை செய்து வருகையில், சில பெரியார்கள் எனக்குப் பரிச்சயமானார்கள். அடிக்கடி பலரோடு நெருங்கிப் பழகியிருப்பினும், இந்தச் சிலர் மட்டும் என் மனதில் இடைவிடாது தங்கி வருகிறார்கள். இவர்களிடம் தனித்தனிச் சிறப்புக்கள் இருக்கின்றன. இவர்கள் என் மனதைக் கவர்ந்தவர்கள். இவர்கள் தமிழ் நாட்டின் எதிர்காலத்திற்கு சுடமான அறிகுறிகள் என்பது என் நம்பிக்கை.

இந்தப் பெரியார்களில் வ. ரா. ஒருவர். இச் சரித்திரம் அவரைப் பற்றியது.

பெரியார் யார்? இந்தக் கேள்விக்கு நானே பதில் சொல்லிக்கொண்டிராமல், வ. ரா.வையே கேட்டு விடுவோம். அவர் சொல்லுவதாவது: 'மனிதன் உள்ளத்தில் இரண்டு வகை உணர்ச்சிகள் இருக்கின்றன. ஒன்று தங்கத்தைப் போல, நிலைத்து, நீடித்து உழைக்கும் உணர்ச்சி. இன்னொன்று களிம்பைப் போல, துருவைப் போல இருக்கும் உணர்ச்சி. இவைகளில் தங்க உணர்ச்சியை வாழ்க்கையில் காண்பிப்பவர்கள் பெரியார்கள்.' வ. ரா.வின் வாழ்க்கையில் இந்தத் தங்க உணர்ச்சியை நான் கண்டிருக்கிறேன்.

அவர் இத்துடன் நிற்கவில்லை. 'இந்த உணர்ச்சியை அழகும் சக்தியும் ஒருங்கே அமைந்த பாஷையில் வெளியிடுபவர்கள் பெரியவர்கள்' என்றும் சொல்லு கிறார். இந்த முறையில் பார்த்தாலும், அவர் பெரியவர் தான். ஒட்டக்கூத்தன் பாட்டிற்கு இரட்டைத் தாழ்ப்பாள் என்பது போல், இந்த இரண்டு வழியி லும் அவரைப் பற்றி நிர்ணயிக்க வழி காட்டியிருக் கிறார்.

வ. ரா. ஒரு எழுத்தாளர். 'ஒரு' என்ன வந்தது?—மிகச் சிறந்த தமிழ் எழுத்தாளர் — காலத்திற்குத் தேவையான உயிரும் புஷ்டியுமுள்ள கருத்துக்கள் தத்துவங்களை நல்ல தமிழில் எழுதக்கூடிய மிகச் சில முதன்மையான எழுத்தாளருள் அவர் ஒருவர். தாம் ஜனங்களுக்குச் சொல்லவேண்டிய செய்தி இருப்பதா லேயே அவர் எழுதுகிறார். 'தமிழ் ஜன சமூகத்தை அடியோடு புதுப்பித்து நிர்மாணம் செய்யவேண்டிய காலமும் தேவையும் வந்துவிட்டன. அந்தப் புதிய நிர்மாணத்துக்கு ஏற்றாற் போல, பாஷையை அமைத் துக்கொள்ளத்தான் வேண்டும். யார் தடை செய்தா லும் அது பலிக்காது.' இது வ. ரா.வின் வாக்கு. பாஷை சம்பந்தமாகக் கம்பன் காலத்தில் ஏற்பட்டிருந்த கஷ் டமும், நெருக்கடியும், நமக்கு இப்பொழுதும் ஏற்பட் டிருக்கிறது. சங்க இலக்கியத் தமிழெல்லாம் வழக் கொழிந்து, சிந்தாமணியைத் தவிர வேறு வழிகாட்டி இல்லாமல் இருந்த காலம் அது. ஜனங்கள் படித்து அநுபவிக்கக்கூடிய தமிழில், யாவரும் எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய விருத்தப் பாவில், ஒரு புதுத் தமிழையே படைத்துக்கொண்டு, கம்பன் தன் காவி யத்தை இயற்றிவிட்டான். கடல் மடை திறந்தது

போல், அந்தக் காவியம், ஆயிரம் வருஷங்களாகத் தமிழ் நாடெங்கும் பரவி வருகிறது. நமக்கு முன்னிருந்த பண்டிதர்களும், நம் காலத்தில் கூடவே இருக்கும் பண்டிதர்களும், தமிழை ஜீவனற்ற பாஷையாக, ஓடச் சாட முடியாத முடமாக, தேக்கமாகச் செய்து விட்டார்கள். நல்ல தெளிவான தமிழை நாம் எளிய தமிழ் நடை என்று சொல்லுவோம். 'எளிய' என்ருல் 'ஏழமை யுடைத்து' என்று பண்டிதர்கள் சொல்லிவிடக் கூடும். இதற்காகத்தானே என்னவோ, புரியக்கூடிய, பொருள் பொதிந்த தமிழை வ.ரா., 'வெள்ளைத் தமிழ்' என்று அழைக்கிருர். வெள்ளைத் தமிழாகிய தெளிவான தமிழ் வசன நடையைப் படைப்பதே நமக்கு ஏற்பட்டுள்ள கஷ்டமான காரியம் என்று மேலே சொன்னேன்.

இதற்கு மூன்று விதத் தடைகள் இருக்கின்றன. பொருள் புரியாத வழக்கொழிந்த கடினச் சொற்களைத் தொகுத்து எழுதுவோர் முதல் தடையாக நிற்கின்றனர். தூய தனித் தமிழ் வீரர் அடுத்த தடை. இங்கிலீஷ் மோகத்தை இன்னும் விடாமல் பிடித்துக் கொண்டிருப்பவர்கள் மூன்ருவது தடை.

முதல் ரகத்தைச் சேர்ந்தவர்களுடைய தொண்டினல், இப்பொழுது தமிழ் நாட்டு இளைஞர்களிடையே, 'உழுவலன்பு'ம், 'உடல்நலஞ் சிறக்கப் பெருமை' யும், 'மெய்யன்பீ'ரும், 'அன்பு கெழுமிய ஐயா' வும் மலிந்து கிடக்கின்றன. இதைக் கண்டு உள்ளங் கொதித்துத்தான் வ. ரா. இப்படி எழுதியிருக்கிருர்: '...சொற்களைத் தூவிச் சிதற அடிக்கிருர்கள். நாலா பக்கங்களிலும் அடிபட்டு விழும் சொற்கள் வீரிட்டு அலறி அழுகின்றன. அவைகளுடைய அழுகைக்

குரல் காதில் கேட்கிறதே யல்லாமல், அவைகள் வர்ணிக்க வந்த அழகு கண்ணில் புலப்படுவதில்லை!' அழகு ஏதாவது இருந்தால்தானே கண்ணில் புலப்படுவதற்கு! வெள்ளைத் தமிழில் எழுதி வழி காட்டிய அருணாசலக் கவிராயர், கோபால கிருஷ்ண பாரதியார் போன்றவர்கள்தான் தமிழைச் சாகாமல் காத்தவர்கள் என்று, அவர்கள் இருந்த திசை நோக்கி வணங்குகிறார் வ. ரா.

தூய தனித் தமிழ்க் கூக்குரல் இனிப் பிழைக்காது. சகல பத்திரிகைகளும், சகல தமிழ்ப் புஸ்தகங்களும் அதன்மேல் விழுந்து நசுக்கி வருகின்றன. சென்னையிலிருந்து மட்டும், வெள்ளைத் தமிழ்ப் பத்திரிகைகளாக இரண்டு, நாள்தோறும் வெளிவருகின்றன! 'தூய தனித் தமிழ்' என்றதுமே வ. ரா. வுக்கு வருகிற வரத்தைப் பாருங்கள்: 'சென்றது தூய்மை; நடப்பது கேவலம்; நடக்கப்போவது மகா கேவலம் என்று எண்ணுவது ஒருவித வைதிக மனப்பான்மை. கா. சுப்பிரமணிய பிள்ளை தமிழ் பேசுவதும், நான் இங்கிலீஷ் பேசுவதும் ஒன்றுதான். இரண்டும் தமிழ் பேசும் தமிழர்களுக்குப் புரியாது.'

மூன்றாவது பிரிவினரைக் கண்டால், அவருக்கு ஆவேசமே வந்துவிடுகிறது. 'இரண்டு மலையாளிகள் சேர்ந்தால் அவர்கள் ஒரு நாளும் இங்கிலீஷில் பேசுவதில்லை. தெலுங்கர்களும் அவ்வாறுதான் செய்கிறார்கள்,' என்று அவர் எடுத்துக் காட்டுகிறார். நமது முன்னோர்கள் தமிழைச் செப்பனிட்டு வைக்காமல் போய் விட்டார்கள் என்று சொல்வோமானால், அதற்கு அவர் கூறும் பதில் இதுதான்: 'பக்குவமாய்ச் சமைத்துப் பிறர் போட்டால் உண்பதற்கு நாம்

லாயக்கானவர்கள் என்று சொல்லுவது போல, நாம் நடந்துகொள்ளுகிறோம். இப்படிச் சொன்னால் நம்மில் பலருக்குக் கோபம் வரலாம். **கோபம் வரவேண்டும் என்றுதான் நான் இவ்வாறு எழுதுகிறேன்...நம்முடையது என்று பாஷைகூட இருக்கப்படாதா?'** 'கார் ஸ்டான்ட் வந்தரும் ஹோல்ட் ஆன் பண்ணு' என்றும், 'என் ஒய்ப் சொல்ரு' என்றும் மணிப் பிரவாளம் பேசுவதையும் அவர் சகிப்பதில்லை.

வ. ரா. ஒரு பச்சைத் தமிழர். தமிழகத்திலும், தமிழரிடத்திலும், தமிழினிடத்திலும் அவருக்குள்ள மோகம் அபாரம். ஒரே பதவியில் ஒட்டிக்கொண்டிருப்பவனை 'இட மோஹினி பிடித்துக்கொண்டு விட்டது' என்று அவர் வர்ணிப்பது வழக்கம். அவருக்கும் இந்தத் தமிழ் நாட்டு 'இட மோஹினி' பிடித்திருக்கிறது என்பது, அவர் எழுத்திலும், பேச்சிலும், எண்ணத்திலும் பிரதிபலித்துக்கொண்டே யிருக்கிறது. பிறபாஷை இலக்கியங்களில் குப்பைகளைக்கூட விடாமல் தமிழ் மொழியில் கொண்டுவந்து கொட்டுகிறவர்களிடத்தில், 'இந்த நாட்டில் இரண்டொரு எழுத்தாளர்கள் தலையெடுத்து வருகிறார்கள். இவர்களைக்கூட ஆதரிப்பார் இல்லையே!' என்று அங்கலாய்ப்பார். தமிழர், வாழ்க்கையில் திட்டமில்லாமல், பாய் மரமும் சுக்கானும் இல்லாமல், காற்றடித்த இடமெல்லாம் தள்ளப்பட்டு வாழ்வதை மாற்றவேண்டும் என்பது அவர் பேராவல். தமிழ் இளைஞர்கள், 'வீட்டோடு வாசல்' என்று தங்கியிருப்பதை அவர் கட்டோடு வெறுப்பவர். இந்த வார்த்தைகளுக்குக் காரணம் பயம், கோழைத்தனம் என்கிறார். 'நடந்தால் மயக்கம் வரும்; ஓடினால் கால் முறியும்; கோலி ஆடினால்

கை ஒடியும்; பந்து விளையாட்டிலே பொட்டிலே படும்; வண்டியில் ஏறினல் குடை „ கவிழ்ந்து போகும்; ஆற்றில் நீந்தினல் வெள்ளம் அடித்துக் கொண்டு போகும், அல்லது மடு பாதாள லோகத் துக்கு இழுத்துக்கொண்டு போய்விடும் — இந்த மாதிரி பெரியவர்கள் நினைக்கிற வீட்டிலே குழந்தை கள் எப்படி வளரும்?' வ.ரா.வின் இந்தக் கேள்விக்கு நீங்கள்தான் பதில் சொல்லவேண்டும். ஆனல், இந் தக் கேள்வியை நாம் கூட எழுதிவிட முடியும். கேள் விக்குப் பின்னல் கொடுத்திருக்கிற விடையை வ.ரா. தான் எழுத முடியும்: 'வாசலை மூடிவிட்டு, வீடு கட் டினல்தான் இந்தப் பேச்சுத் தொலையும் போலிருக் கிறது!'

தமிழ் நாட்டுச் 'சாலையிலே ரெண்டு மரம், சர்க் காரு வச்ச மரம்' எல்லாம் அவருக்குப் பிரிய மானவை. 'பச்சை குத்தணுமா, குறி சொல்லணுமா, காடடுக் கருவேப்பிலை வாங்கலியோ!' என்று கூவிக் கொண்டு, கருவேப்பிலை, பச்சை குத்தும் ஊசி, மை, குறி சொல்லும் கோல் சகிதமாகத் தோன்றும் மைக் குறத்திகள், அங்காடிக் கூடைக்காரிகள், மார்க்கட்டு மாணிக்கங்கள், வண்டிக்காரச் செல்லமுத்துகள், குப்பிப் பாட்டிகள், தாசில் அய்யர்கள், கலெக்டர்கள், தலையாரிகள், கிராமக் கணக்குப்பிள்ளைகள் — இப்ப டித் தமிழ் நாடெங்கும் பரந்து வாழும் ஆசாமிகளிடம் அவருக்குள்ள பிரேமை சொல்லுந் தரமன்று. 'அவர் களை யெல்லாம் அகக் கண்ணல் பார்த்து அனுபவித்து அவர் எழுதியுள்ள சித்திரங்களைப் படிக்கும்பொழுது, 'ஆம், இவர்கள் எல்லோரும் நம்மவர்கள் அல்லவா! இத்தனை நாளாக நாம் பார்த்திருந்தும், இவர்களிடத்

துள்ள நம் உறவை இவரல்லவா எடுத்துக் காட்ட வேண்டியிருக்கிறது!' என்று உணர்வோம்.

வ. ரா.வின் தமிழ் நடை அலாதியானது. மிகச் சமீப காலத்தில் தோன்றியுள்ள ஆங்கில அமெரிக்க இளம் எழுத்தாளர் நடை போன்றது. ரத்தினச் சுருக்கமாயும், குறித்த பொருளைத் தெளிவாய் உணர்த்துவதாயும், ஜனங்களிடையே ஜீவனோடு விளங்குகிற சொற்கள் நிறைந்ததாயும் இருக்கும். சொற்களுக்காக அவர் அகராதிக் கல்லறைகளில் தேடுவதில்லை. இலக்கணத்தைக் கண்டாலே அவர் திரும்பிப் பாராமலே ஓடிவிடுவார். இல்லாவிட்டால், ஔரங்கஸீப் சங்கீதத்தைச் சொன்னது போல், 'திரும்ப எழுந்து வராமல் ஆழமாக அதை வெட்டிப் புதையுங்கள்!' என்று சொல்லவும் கூடும். ஏனென்றால், நன்னூல் சூத்திரத்தின் ஆதாரமில்லாமலே, பழையன கழிந்து போகத்தான் வேண்டும், புதியன புகுந்துதான் தீரவேண்டும் என்று சொல்லக் கூடியவர் அவர். 'வழுவல' என்று மன்னிப்புக் கேட்பது அவர் மரபில் இல்லை. வசனமே இப்பொழுதுதான் தமிழில் உருவாகி வருகிறது. எழுத்தாளர்கள் இப்பொழுதுதான் அரும்பி மலர்ந்து வருகிறார்கள். மற்ற நாடுகளுக்கு நாம் எத்தனையோ நூற்றாண்டுகள் பின்தங்கி நிற்கிறோம். எண்ணத்திலும், பாஷையிலும், செயலிலும் நாம் ஒரே பாய்ச்சலில் பல நூற்றாண்டுகளைத் தாண்டி அவர்களை எட்டிப் பிடிக்க வேண்டியிருக்கிறது. வளர்ச்சிபெற்ற பிறகு புதிதாய் இலக்கணம் வகுக்கப்படவேண்டியிருக்க, இப்பொழுதே எழுத்தாளர் கைகளிலும் கழுத்திலும் இரும்புத் தளைகளை மாட்டுவது கூடாது என்பதுதான் அவர் கருத்து. இதையேதான் அவர்

விமரிசகர்களிடமும் சொல்லி வருகிறார். 'முளையிலே கிள்ளி யெறியாதீர்கள்! பூவைக் கசக்கி மோந்து பாராதீர்கள்!' என்று அவர் அடிக்கடி வேண்டிக் கொள்ளுகிறார்.

வ. ரா.வின் மேதை பிரகாசிக்கவும், எழுத்து உயிர் சுமந்து ஒலிப்பதற்கும், உதவிய காரணங்களில் மூலமானது ஒன்று. அதுதான் பாரதி. சுப்பிரமணிய பாரதியார் இல்லாவிட்டால், வ. ரா. இளவயதிலேயே தம் எழுத்தின் சக்தியையும், எதிர் காலத்தில் தாம் செய்யவேண்டிய காரியத்தின் பெருமையையும் உணர்ந்திருப்பது கஷ்டமா யிருந்திருக்கும். பாண்டிச் சேரியிலே, அரவிந்தர் ஆசிரமத்தில், அவர் எழுதிப் பாய்க்கு அடியில் ஒளித்துவைத்த கதையைப் பாரதி யார் எடுத்துப் பார்த்திராவிட்டால், அவர் தம்மைத் தாம் அறிந்துகொள்ள நெடுநா ளாயிருக்கும்.

'அதென்னது ஓய், பாய்க்கடியில் ஒளித்துவைக் கிறீர்?' என்று கேட்டார் பாரதியார்.

'இல்லை......அது......வந்து......கடுதாசி.'

'சும்மா சொல்லும். கடுதாசியானால் ஒளித்து வைப்பானேன்? அதை எடும், பார்ப்போம்!'

பிரித்துப் பார்த்தால், அது பங்கிம் சந்திரரின் 'ஜோடி மோதிர'க் கதையின் தமிழ் மொழி பெயர்ப்பு. பாரதியார் படித்தார். அவ்வளவுதான், கதையைக் கையில் பிடித்துக்கொண்டு அரவிந்த பாபுவிடம் ஓடினார். 'பாபு! பாபு! நம்ம வ. ரா.வின் தமிழ் எப்படியிருக்கிறது தெரியுமா! ரொம்ப நன்றா யிருக்கிறது! இத்தனை நாளாய் இது தெரியாதே!' என்று ஆரவாரம் செய்தார். எந்த நேரத்தில் பாரதி யார் திருவாய் மலர்ந்தாரோ, தெரியவில்லை — '**பிர**

**பஞ்ச மித்திரன்'**, **'தமிழ்நாடு'**, **'வர்த்தக மித்திரன்'**, **'சுதந்திரன்'**, **'சுயராஜ்யா'**, **'மணிக்கொடி'**, **'வீரகேசரி'**, **'பாரத தேவி'** முதலிய பற்பல பத்திரிகைகளின் ஆசிரியராக இருந்து வ. ரா. நூற்றுக்கணக்கான கட்டுரைகளும், தலையங்கங்களும் எழுதும்படி நேர்ந்து விட்டது. பாரதியார் வ. ரா.வுக்குச் செய்த தொண் டைத்தான், வ. ரா. இப்பொழுது இளம் எழுத்தாள ருக்குச் செய்து வருகிறார்.

* * *

இவருடைய வாழ்க்கையிலே எத்தனையோ விசித்திரங்கள் பின்னிக் கிடக்கின்றன. ஆயினும், ஒரே பொற் சரடு ஓடுவது போல், புகழ்பெற்ற 1908 சகாப்தத்திற்குரிய உணர்ச்சி ஊடே ஓடிக்கொண் டிருக்கிறது. அக் காலத்திய பாரதியார், வ. உ. சிதம் பரம் பிள்ளை, சிவா முதலியோர் வார்க்கப்பட்ட அச்சி லேயே இவரும் வார்க்கப்பட்டவர் என்பதில் சந்தேக மில்லை. இந் நால்வருக்குள் எத்தனையோ பேதங்கள் உண்டு. ஆயினும் அச்சு ஒன்றுதான். எல்லோரு டைய வாழ்க்கையையும் பாதித்து உருவகப்படுத்திய சம்பவங்கள் ஒன்றுதான். பொதுவான ஆதர்சமும் மார்க்கமும் ஒன்றுதான். சுதேசி இயக்கம் இல்லா விட்டால், பாரதியாரின் 'சுதேச வணக்கம்' இல்லை; தூத்துக்குடிக் கப்பல் கம்பெனி இல்லை; சிவாவின் 'சிவாஜி விஜயம்' இல்லை; வ. ரா. எழுதிய கட்டுரை களைப் படிக்கத் 'தமிழ் நாடு' பத்திரிகையை எதிர் பார்த்து நம்மிற் பலர் தபாலாபீசில் போய்க் காத்து இருந்திருக்கவும் மாட்டோம். பிற்காலத்தில் பாரதி யார், மேல் நாடுகளில் — முக்கியமாக ரஷ்யாவில் —

ஏற்பட்ட மாறுதல்களைக் கண்டு, பழைய சகாப்தத்தி லிருந்து தம்மைக் கொஞ்சம் விடுவித்துக்கொள்ளப் பார்த்தும், அங்கேயும் 'மாகாளி பராசக்தி'யே வந்து நின்றுவிட்டாள். வ. ரா.விடம் அந்த சகாப்தத்தின் சாராம்சம் அப்படியே உறைந்துவிட்டது. பின்னுல் மகாத்மா காந்தியின் இயக்கம் அதை நன்ருகப் பயன்படுத்திக்கொண்டுவிட்டது. பாரதியார் பாராத சிறைக்கூடத்தையும், அவர் ஒரு ஸத்யாக்ரகியாகப் போய்ப் பார்த்துவிட்டு வந்துவிட்டார்.

இவரிடத்திலே காலத்திற்கேற்ற மூன்று பெருங் குணங்கள் அந்தக் கால முதலே பொருந்திவிட்டன. இந்த மூன்றில் ஒன்று குறைந்தாலும் தற்காலத் தமிழ் நாட்டில் தனிச் சிறப்பை அடைய முடியாது. அடிமை நாட்டில் எல்லோருமே (ஓரளவாவது) அர சியல்வாதிகளாக இருந்து தீரவேண்டியிருக்கிறது. வெறும் ஏட்டுப் பூச்சிகளை வைத்துப் பராமரிக்கும் ஆடம்பரத்தை அடிமை நாட்டினிடம் எதிர்பார்க்க முடியாது. வ, ரா. அரசியலில் தீவிர அமிதவாதி, புரட்சிக்காரர். நாட்டுக்கு வடுப்படாத பூர்ண விடுதலை யையே அவரும் வேண்டுகிருர். அடுத்தாற் போல், சமூக சீர்திருத்தங்களில் அவர் முன்னணியில் நிற் கிருர். புரட்சியே வேண்டும் என்கிருர். இந்த மனப் பான்மை இல்லாதவர்களை முற்போக்கான ஜனங்கள் ஒப்புவதில்லை. ஸ்ரீ. சத்தியமூர்த்தி பாலிய விவாகத் தடை மசோதாவை ஒப்புக்கொள்ளாததற்கு, ஸ்ரீ. கமலா தேவி, அவர் 'எல்லாவற்றிலும் பிற்போக் கானவர்' என்று எழுதியது உங்களுக்கு ஞாபகம் இருக்கலாம்......மூன்ருவதாக வ. ரா. திறமை மிக்க தமிழ் எழுத்தாளர்.

வ. ரா.வின் முழுப் பெயர் வ. ராமஸ்வாமி அய்யங்கார். பிறந்த ஊர் திருவையாற்றுக்கு அடுத்த திங்களூர். இவருடைய தந்தையார் வைதிகம் மிகுந்தவர். வ. ரா.வுக்குப் பத்து வயதா யிருக்கும்பொழுது, குடும்பத்தார் காவிரியாற்றின் கரையிலிருக்கும் திருப்பழனத்தில் குடியேறி வசித்துவந்தனர். அப்பொழுது அவர்களுக்கு சுமார் ரூ. 40,000 பெறுமதியுள்ள நிலங்கரைகள் இருந்தன. வ. ரா. வின் படிப்பு எப். ஏ. வரைதான். எப். ஏ. பரீட்சையும் இரண்டு முறை முயன்றும் ஏமாற்றிவிட்டது. ஆனால் இதிலும் ஒரு திருப்தி என்னவென்றால், மற்ற ஆங்கிலம், கணக்கு முதலியவைகளில் தேறவில்லையானாலும், தமிழில் மட்டும் பாஸ் செய்திருந்தார்! காலேஜில் படிக்கும் பொழுதே, சுதேசி இயக்கத்தில் சேர்ந்து, வந்தே மாதர கோஷம் செய்தார். அதற்கு ரூபாய் இரண்டு அபராதம் கொடுத்தது அவர் தந்தைக்குத் தெரியுமோ என்னவோ! எனவே, வ. ரா.வின் பள்ளிக்கூடப் பட்டம் மெட்ரிகுலேஷன்தான். அந்தப் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறியிருந்தார். அதற்கு முந்திய 'அஞ்சு ரூபாய் பரீட்சை'யில் ஜில்லா முதலாகத் தேறியிருந்தார். லோயர் ஸெக்கண்டரி பரீட்சைக்குத்தான் அந்தக் காலத்துப் பெயர் இது (1902).

அந்தக் காலத்திலிருந்தே கொடியாலம் ஸ்ரீ. வா. ரங்கசாமி அய்யங்காருக்கும் இவருக்கும் நெருங்கிய நட்பு இருந்துவந்தது. இரண்டாந்தரம் எப். ஏ. பரீட்சைக்குப் போகும்படி தூண்டிப் பணம் கொடுத்து உதவியவரும் ஸ்ரீ. ரங்கசாமி அய்யங்கார்தான்.

பரீட்சையில் தேறவில்லை என்றதும், வ. ரா. கல்கத்தாவுக்கு ஓடிவிட்டார். சுரேந்திரநாத் பானர்ஜி

ஸ்தாபித்திருந்த ரிப்பன் கலாசாலையில் சேர்ந்து எப்படியாவது பி. ஏ. பட்டம் பெறவேண்டுமென்று அவருக்கு ஆசை. ஆனால், சுரேந்திரநாதரின் பங்களாவுக்குள் போனதும், 'அவருக்கு நோய், பார்க்க முடியாது!' என்று சொல்லிவிட்டனர். காலை 11 மணியிலிருந்து மாலை 4½ வரை இவரும் காத்திருந்து பார்த்தார். அப்புறந்தான் சுரேந்திரநாதர், ஜே. என். ராய் என்பவருடன், வெளியே வந்தார். இவர் வணங்கி நின்றதைக் கண்டு விசாரித்தாராம். ஆனால், ஜே. என். ராய் சிபாரிசு லெட்டர் ஏதேனும் உண்டா என்று கேட்டாராம். இவர் இல்லையென்றதும், 'சிபாரிசுக் கடிதமில்லாமல் சுரேந்திரநாதரிடமா வருவது! பொருத்தமற்ற விஷயம்!' என்று இரு முறை கூறி, ராய் சிரித்துவிட்டார். அவ்வளவுதான், இரவு 8-மணிக்குக் கல்கத்தா திரும்புதல், இரவில் அவசியம் கருதி 'உண்ணு விரதம்', ஒரு வாரத்திற்குப் பின் பழைய சென்னைக்கே திரும்பப் பிரயாணம்.

1910-ஆம் வருஷத்தில்தான் வ. ரா. புதுவைக்குச் சென்றது. அங்கே முதன் முதலாக அரவிந்தரையும் பாரதியாரையும் தரிசித்துக்கொண்டார். அவ்வருஷக் கடைசியில் நடந்த அலஹாபாத் காங்கிரஸுக்குப் போயிருந்தார். இது இவர் சென்ற இரண்டாவது காங்கிரஸ். முதலில் 1908-ல் சென்னையில் நடந்த காங்கிரஸையும் பார்த்திருக்கிறார். தேச ஊழியத்தில் நாட்டமுள்ளவர்களுக்கு காங்கிரஸ் மகா சபையின் வைபவத்தை ஓரிரண்டு முறையாவது பார்ப்பதால் ஏற்படும் பயன் சொல்லுந்தரமில்லை. பாராதவர்கள் வெறும் கிணற்றுத் தவளைகள் என்று கூடச் சொல்லிவிடலாம்.

1911 ஜுன்மீ முதல் 1914 ஜனவரி முடிய, வ.ரா. புதுவையில் வசித்துவந்தார். முதலில் சாப்பாடு முதலியவை பாரதியார் வீட்டில், பிறகு அரவிந்தர் இல்லத்தில் நடந்தன.

1915-ல் வ. ரா. முதன் முதலாக ஒரு நாவலை எழுதி முடித்தார். அதன் பெயர் 'சுந்தரி அல்லது அந்தரப் பிழைப்பு'. அதில் ஆசிரியர் கூறியுள்ள சமூக முன்னேற்றமான விஷயங்கள் மிகவும் போற்றத் தக்கவை. சிறு பிராயம் முதற்கொண்டே சமூகத் தளைகளை உடைத்தெறிவதில் இவருக்கு மிகுந்த அக்கரை இருந்து வந்திருக்கிறது. ஒரு சமயம் இவருடைய கிராமத்தில் ஒரு ஹரிஜன் இறந்துபோன பொழுது, சவத்தைத் தெரு வழியாகக் கொண்டுபோக விடாமல், வரப்பு வழியாகவே கொண்டுபோக வேண்டுமென்று ஜாதி ஹிந்துக்கள் தடை செய்தார்களாம். அப்பொழுது இவர் ரோடு வழியாகத்தான் கொண்டுபோக வேண்டும் என்று பிடிவாதம் செய்திருக்கிறார். தகப்பனார் குடியிருந்த வீட்டில் ஹரிஜனங்களை அனுமதிக்காததால், இவர் பக்கத்தில் தனியாக ஒரு பங்களா கட்டி, அதில் கொல்லை, வாசல் இருபுறத்தாலும் ஹரிஜனங்களை அனுமதித்ததுடன், வீட்டினுள்ளே சமபந்தி போஜனங்களும் நடத்தி வைத்தாராம்.

வ. ரா. ஓரிடத்திலும் நிலைத்திருக்கவில்லையே என்று சிலர் சொல்லுகிறார்கள். அப்படி நிலைத்திருந்தால் அவர் வ. ரா. இல்லை. திருப்பழனத்திலேயே தங்கி யிருந்திருப்பாரானால் அவர் வாழ்க்கை எந்தப் பக்கமாய்த் திரும்பி யிருக்கும்? தேர் வடம் போல் பூணூலும், திருமண் காப்பும், காலையும் மாலையும் வஸ்

திரங்களைத் துவைப்பதே லட்சியமாக வைத்துக் கொண்டு அவர் வாழ்ந்திருந்தால், அக் காட்சியைக் காணச் சகிக்குமா? 'நிலையாமை, நில்லாமை' இரண்டையும் வேண்டுபவர் அவர். அவருடைய வாழ்க்கைக் கோடு, வளைந்து வளைந்து சென்றாலும், முற்போக்காகவே செல்வதை நாம் குறிப்பிட வேண்டும். ஆசையை - லட்சியத்தை - உயரே தள்ளி வைத்துக் கொண்டுள்ள ஒருவருக்கு ஓய்வேது, நிலையேது? மேலும், தமிழ் நாட்டில் எழுத்தாளர் நிலையும், பத்திரிகைகளின் நிலையும் எல்லோர்க்கும் தெரிந்த விஷயங்களே. எல்லாம் இப்பொழுதுதான் உருவாகி வருகிறது. மேலும் வ. ரா. போன்றோர் அஸ்திவாரத்தில் தங்களை அர்ப்பணம் செய்துகொண்டவர்கள். இவர்கள் பட்ட கஷ்டங்கள் எல்லாம் அடியில் மறைந்து கிடப்பவை. ஆனால், கட்டிடம் மேலெழுந்து நிற்கும். சுகவாசம் அனுபவிப்போர் எதிர்கால இளைஞர்கள்.

வ. ரா. வின் பத்திரிகை முயற்சிகளில், அவர், கு. ஸ்ரீனிவாசன், தெ. ச. சொக்கலிங்கம் மூவரும் சேர்ந்து தொடங்கிய '**மணிக்கொடி**' குறிப்பிடத் தக்கது. இம் மூவரும், 1933, செப்டம்பர் 17-ஆம் தேதி வெளிவந்த அதன் முதல் இதழில் எழுதியிருந்த வாசகம் தமிழ் நாட்டிற்கே புதிய ஒளி கொடுப்பதாயுள்ளது. இவர்களுடைய பாஷையும் பாணியுமே புது மோஸ்தரா யிருந்தது. அவ் வாசகம் வருமாறு:

**'பாரதி பாடியது மணிக்கொடி. காந்தி ஏந்தியது மணிக்கொடி. சுதந்திரப் போராட்டத்தில், பல்லாயிரம் வீரர்களை ஈடுபடச் செய்தது மணிக்கொடி. மணிக்கொடி பாரத மக்களின் மனத்திடை ஓங்கி வளரும் அரசியல் லட்சியத்தின் நுனி, முனை, கொழுந்து.'**

இத்தனை எழுதியதிலிருந்தே வ. ரா.வின் குணம் பிரதிபலிக்கும். வ. ரா.வின் முகத்தைப் பார்த்தாலே, கண்களின் துருதுருப்பும் ஒளியும் நம்மை வசீகரித்து விடும். நன்றாக க்ஷவரம் செய்துள்ள முகம், மூக்குக் கண்ணாடி, வெண்பட்டுப் போல் நரைத்து சீவி விடப்பட்ட கிராப்பு, தூய்ய வெள்ளையான கதர் ஜிப்பா — இவற்றில் எதுவும் நம்மைப் பயமுறுத்துவதில்லை. கண்ணைப் போலவே துடித்துக்கொண்டிருக்கும் அவருடைய நாக்கு பேச ஆரம்பித்துவிட்டால் தான் நாம் நம் நிலையைக் கவனித்துக்கொள்ள வேண்டும். விவாதத்திற்கு ஆரம்பித்துவிட்டாலோ, எதிரேயிருப்பவரின் கண்களைப் பொத்துக்கொண்டு, உள்ளத்தில் புகுவார். அடுத்தாற்போல் பேசப் போவதை முன்னதாகவே அறிந்து, ஒரு விநாடியில் அதற்குச் சொல்லவேண்டிய பதிலைத் தயாரித்துக் கொள்வார். எந்த விஷயமா யிருந்தாலும், அதை ஓர் ஒழுங்கு முறை பற்றி விவாதிப்பதில் அவருக்கு வெகு குஷி. எதிரி யொருவர் இருந்தாலும், ஏதோ பேச்சளவில்தானே மறுக்கிறார் என்று விடாமல், கோதாவுக்கு வெளியே தூக்கித் தூக்கி எறிவார். ‘நான் தான் ஒத்த வரியில் சொன்னேனே, இந்த நாட்டு ஜனங்களுக்கு வாழ்க்கையில் திட்டமில்லை என்று! நீ காந்தியைச் சுட்டிக் காட்டுகிறாய். அவரை எல்லோரும் பின்பற்ற முடியாது! ஜவாஹரைச் சொல்லுகிறாயோ? அவர் வாழ்க்கைத் திட்டம் சுதேசிச் சரக்கில்லை. நாட்டுக்குப் புறம்பான வஸ்து — அப்புறம், நமக்குன்னு என்ன இருக்கு?’ என்று கேட்டுக் கொண்டிருப்பார். நீங்கள் ஏதேனும் சொல்லுங்கள். அவரும் ஏதேனும் சொல்லுவார். ஆனால், அந்தக்

கேள்விக்குப் பதில் சொல்லாமல் நீங்கள் வெளியே வர முடியாது. நான் ஒரு சமயம் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லிவிட்டேன். 'நீங்கள்தான் விளக்கமாய் இப்படி இப்படி இருக்கவேணும் என்று சொல்லி விடுகிறதுதானே!' என்று சொன்னேனோ இல்லையோ, 'அதைப் பற்றித்தான் யோசித்திருக்கிறேன். நான் சொல்லவேண்டியதை யெல்லாம் ஒரு புஸ்தகமாக எழுதிவிடப் பார்க்கிறேன்' என்றார். இந்த ஒரு புஸ்தகமா எழுதலாம்? இன்னும் எத்தனையோ தமிழில் வரவேண்டியிருக்கிறதே!

சாதாரணமாக வ. ரா.வுடன் சம்பாஷிப்பதில் ஒரு தனி இன்பம் உண்டு. 'ஓய்' 'காணும்' என்றெல் லாம் அவர் உறவு கொண்டாடி உற்சாகமாய் ஆரம் பித்துவிட்டால், கேட்பவர் பாடு யோகந்தான், 'கருத்துக்களின் மேல் கருத்துக்கள் துரத்திக்கொண்டு வரும்' என்று இங்கிலீஷில் சொல்லுகிறார்கள். அவரு டன் பேசுவது சம்பாஷணையல்ல, செவிக்கும் சிந்தைக் கும் விருந்து. சம்பாஷணை ஒரு கலை. அதில் அவர் வல்லவர். ஆனால், 'பெரும்பான்மையோர் சம்பா ஷணையை மேடைப் பிரசங்கமாக அடித்து விடுகிறார் கள்......சத்தம் போட்டால், அது சம்பாஷணை ஆகுமா? அதிலே ரஸம் இருக்குமா? அதைக் கதை யாக, காலட்சேபமாக அடித்துவிடுவது தவறு' என்று அவர் தம் மனக்குறையைப் பற்றி எழுதுகிறார். சம் பாஷணைதான் என்னது? அது 'பேச்சு - இலக்கியம்' என்கிறார். 'உணவுக்கு உப்பு எப்படியோ, அப்படிச் சம்பாஷணை வாழ்க்கைக்கு' என்பது அவர் சித்தாந்தம்.

அவருக்குப் பேச்சிலே இருக்கும் இன்பம் படிப் பிலே கிடையாது. ஆனால், படிக்காம லிருப்பதும்

இல்லை. 'இவங்க எண்ணங்களை யெல்லாம் நம் தலை மேலே கொண்டுவந்து கட்டுகிருன்கள்' என்பார் பிற ஆசிரியர்களைப் பற்றி. பிறகு சிந்திக்கும் பொழுது அந்த எண்ணங்களே முன்ஞல் வந்து நிற்கின்றனவாம்.

வ. ரா. வுடன் நெடுநாள், நெடுநேரம், பழகிஞல் தான் அவரைப்பற்றித் தெரிந்துகொள்ளலாம் என்பதில்லை. ஒரு நாளில் ஒரு மணி நேரத்தில் பழகிஞல் போதும். அதை 24-ஆல் பெருக்கிக்கொள்ள வேண்டியதுதான்.

ஓயாமல் பேசித் தூண்டித் துளைப்பவர்களைக் கண்டால் அவருக்குப் பிடிக்காது. வந்த காரியத்தைச் சட்டென்று சொல்லிவிட்டு, ஒரு மணி நேரம் உட்கார்ந்திருந்தாலும் விட்டுவிடுவார். 'பீடிகை', 'அவதாரிகை' ஆரம்பித்துவிட்டாலோ, சகிக்க மாட்டார். அந்தரங்க விச்வாசமில்லாத பேச்சு, அப்படி யிருக்க வேணும் இப்படி யிருக்கவேணும் என்று வெறும் ஒழுக்க சம்பந்தமான விதிகள் வகுத்துப் பேசுவது— இதெல்லாம் அவருக்கு உதவாது.

யாரைப் பற்றியும் அவர் சட்டென்று அபிப்பிராயம் கொண்டுவிடுவார். ஒரு முறை கொண்ட அபிப்பிராயம் அப்புறம் மாறுவது அபூர்வம். பழைய கிழட்டு ஜெர்மன் மந்திரி பிஸ்மார்க், 'ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு விலையுண்டு' என்ருர். 'எவ்வளவு விலை' என்பதை ஒரு நிமிஷத்தில் வ. ரா. மதித்துவிடுவார்.

பண்டைத் தமிழ் நூல்களை அவர் முறையாகக் கற்றிருப்பதாகத் தெரியவில்லை. சங்க நூல்கள், கம்பன்-எல்லாவற்றிலும் ஆங்காங்கே சில விஷயங்கள் தான் பார்த்திருப்பார். ஆனல் படிக்காமலே விஷயங்

கள் இப்படித்தான் என்று உணர்ந்திருக்கிறார். படித்தவர்களில் பலர் என்ன செய்துவிட்டார்கள்? சிலப்பதிகாரத்தை, 'கோவலன் கதை' 'கண்ணகி கதை', 'சிலம்புக் கதை', 'சிலம்பு விற்ற கதை' என்றெல்லாம் எழுதிச் சில்லறை விற்பனை செய்வதிலிருந்தே தெரிகிறது. இந்த வழிக்கும் அவருக்கும் வெகு தூரம். 'ஐயா, உங்கள் திருக்குறள்-பாஷை இனிமேல் தமிழ் நாட்டில், பேச்சிலோ, எழுத்திலோ வழங்கப் போவதில்லை!' என்று வ. ரா. சொல்லுகிறார். இன்று அவருக்கு, தர்மர், ஹரிச்சந்திரன், வசிஷ்டர், புத்தர் முதலியோரைக் காட்டிலும் காந்தி எப்படி அதிக முக்கியமாகத் தோன்றுகிறாரோ, அதே போல, கம்பன், இளங்கோ, சாத்தனார், வள்ளுவர் முதலியோரைக் காட்டிலும், பாரதியாரே அதி முக்கியமாகத் தோன்றுகிறார்.

அவருக்குப் பொறுமை கொஞ்சம் குறைவு. சில பேர்களோடு மட்டுந்தான் அவர் அளவளாவிப் பழக முடியும். எது சொன்னாலும், எது கேட்டாலும், குறிப்பாகவும் திட்டமாகவும் இருக்கவேண்டுமென்று விரும்புவார். அவருடைய அபிப்பிராயங்கள் உருக்கினால் செய்யப்பட்டவை, வளையமாட்டா. சோம்பேறிகளுடன் அவரால் தங்க முடியாது.

தொழில்முறை, பணம் சம்பாதித்தல், சேமித்து வைத்தல் — இவையெல்லாம் இனிமேல்தான் அவர் படிக்கவேண்டும். பூனை போல் பதிபோடத் தெரியாது, பாய மட்டும் விரும்புவார். இதனால்தான் அவர் அநேக காரியங்களில் வெற்றிபெற முடியவில்லை. எந்தக் காரியத்தை எடுத்தாலும், முடிவு சரியாய் வரவேண்டுமென்பது அவர் கையில் இல்லை.

புகையிலே, சிகிரெட், பொடி ஒன்றுமே அவர் உபயோகிப்பதில்லை. பொதுவாகவே ஆடம்பரங்களை, ஒழுக்கத்திற்கு இடையூறான வியாபாரங்களை, அவர் வெறுப்பவர். பொடி, புகையிலை முதலியவற்றின் உதவி யில்லாமலே உற்சாகமாய் வேலைசெய்து கொண்டிருக்கிறார்.

ஹிட்லருடைய திறமையைக் கண்டு அவருக்கு வியப்பு அதிகம். முன்னால் முஸோலினியைப் பற்றி எழுதும்பொழுது, சர்வாதிகாரத்தையே புகழ்ந்து எழுதியிருக்கிறார். முஸோலினிக்கும் இவருக்கும் பொதுவான குணம் ஒன்றுண்டு. இருவரும் 'பேனுவால் பிரசிங்கிப்பவர்கள்'. ஹிட்லர் தம் நாஜிக் கொள்கையை விளக்க 600 பக்கத்தில் 'மெயின் காம்ப்' எழுதினார். ஆனால், முஸோலினி தம் பாஸிஸ்ட் கொள்கையைப் பன்னிரண்டு பக்கத்திற்குள் அடக்கி எழுதி முடித்தவர். இதுபோல் வ. ரா. வும், மிகமிகச் சுருக்கமான அளவில் பெரிய விஷயங்களை எழுதிவிடக் கூடியவர். சர்வாதிகாரிகளுடன் வேறு எந்த ஒற்றுமையையும் நாம் எதிர்பார்க்க முடியாதல்லவா!

இவருக்கு ரொம்ப வெறுப்பான பொருள்கள், முதுகெலும்பில்லாதவர்கள், தரித்திரர்கள், ஜரிகை வேஷ்டி, பேரம் பேசுதல், 'ஆனால்' 'இருந்தால்' 'காலம் வரணும்' என்ற சொற்கள், வயோதிகம், வைதிகம், பிஞ்சிலே பழுத்த இளைஞர், ஆனந்த விகடன்.

வ. ரா. ஒரு பூணூலில்லாத பிராமணர். யக்ஞம் செய்வதானுல்தானே உபவீதம் வேண்டுமென்று விட்டுவிட்டார் போலிருக்கிறது. அவர் ஒரு வய

தான வாலிபர். வேண்டியவர்களிடம் உரிமையோடு சதா சண்டைபோடும் நண்பர்.

வ. ரா. வுக்கு வயதென்ன இருக்கும்? அதைப் பற்றி நாம் தூண்டித் துளைப்பானேன்!

இவருடைய 'நடைச் சித்திரம்' என்ற நூலில், ஒரு கற்பனைப் பையனைச் சிருஷ்டித்து இவ்வாறு வர்ணித்திருக்கிறார்:

'தங்கத்தை உருக்கி வார்த்த விக்கிரகத்தைப் போல இருப்பான். அகன்ற நெற்றி, செந்தாமரைக் கண்கள், சுவாமி விவேகானந்தரைப் போல தலை, பூமியில் ஒரு நிமிஷமும் தரிக்காமல் எப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கும் கால்கள், ஓயாத நாக்கு, ஸையன்ஸ்காரர்கள்கூட விளக்கத்தோடு பதில் சொல்ல முடியாத கேள்விகள், பம்பரம் போல் விறுவிறுப்பில் தூங்கும் குணம், சொன்னதை வேதமாக நம்பும் தன்மை — இவை எல்லாம் சேர்ந்ததுதான் ராமு.'

இந்தக் கற்பனை ராமுவுடன் போட்டி போட, இன்று வ. ரா. வுக்கு ஒரு குழந்தை யிருக்கிறான். இருவரில் யார் ஜயித்தாலென்ன? எல்லாம் அவர் 'குடும்ப' ஜயந்தானே!

# நடைச் சித்திரம்

[ வ. ரா. எழுதிய 37 சித்திரங்கள் ]

1. குழந்தை ராமு
2. மைக் குறத்தி
3. தாசில் அன்னதானமய்யர்
4. கந்திராட்டு குண்டுப்பிள்ளை
5. வாத்தியார் நாணுவய்யர்
6. அங்காடிக் கூடை லட்சுமி
7. மந்திரி பதி
8. வண்டிக்கார செல்லமுத்து
9. பெரிய கலேட்டர் சாமி
10. காவல் - காத்தான்
11. ஸ்டேஷன் மாஸ்டர் சாமி நாயுடு
12. மார்க்கட்டு மாணிக்கம்
13. குப்பிப் பாட்டி
14. சமையல் சாமா
15. ஐகோர்ட்டு பாலிஷ்டர் மணி
16. இன்ஸ்பெக்டர் எம். எஸ். எம். பிள்ளை
17. தாகு கிருஷ்ணன்
18. டாக்டர் திருமலை
19. மணியகார ராஜா கவுண்டர்
20. மைனர் துரைக்கண்ணு
21. சிங்காணி சின்னான்
22. வாத்தியார் சாமண்ணு
23. பூசாரி சரவணை
24. தாலூகா குமாஸ்தா
25. பியூன் சின்னக்கண்ணு
26. தாவளி கோகிலாம்பாள்
27. ஹோட்டல் மணி
28. வக்கீல் குமாஸ்தா சாமு
29. வண்ணார நாகப்பன்
30. சவுகார் ரெங்கில்தாஸ் சேட்
31. சங்கரலிங்க பண்டிதர்
32. பத்திராதிபர் ஸாரதி
33. கான்ஸ்டேபிள் சுப்பய்யா
34. டபேதார் காசி ராவ்
35. கர்ணம் குப்பு முதலியார்
36. உதவி ஆசிரியன் குஞ்சிதம்
37. வேலைக்காரி அம்மாக்கண்ணு

விலை ரூ. 1—8—0. : : தபால் செலவு 3 அணு

நவயுகப் பிரசுராலயம் லிமிடெட், ஜி. டி. சென்னை

# மழையும் புயலும்

## [ வ. ரா. எழுதிய கட்டுரைகள் ]



முதலிய கட்டுரைகள்

விலை ரூ. 1—8—0 : : தபால் செலவு 3 அணா

நவயுகப் பிரசுராலயம் லிமிடெட், ஜி. டி. சென்னை